# 'ஹீச்' ன்னு மட்டும் சொல்லு!

ஒரு துருக்கிய நாட்டுப்புறக் கதை

தமிழில்: குமரேசன் முருகானந்தம்



# “ஹீச்' ன்னு மட்டும் சொல்லு!

ஒரு [illegible] நாட்டுப்புறக் கதை

தமிழில்: குமரேசன் முருகானந்த



*ஒரு தடவை இருந்தது, இரண்டாவது தடவை இல்லை,* கடவுளின் படைப்பில் எத்தனையோ ஜீவராசிகள் இருக்கும்போது, அதிகமாக பேசுவது பாவம் என்றிருந்தது --- சரி, அந்தக்காலத்தில், ஒருவரிடத்தில் **ஹா சா ன்** எனும் வேகுளித்தனமான சிறுவன் வேலை செய்து வந்தான். இந்த **ஹா சா ன்** ஒரு நல்ல வேலைக்காரன் ஒரே ஒரு விசயத்தைத் தவிர: இந்த நிமிடம் அவனை என்ன செய்ய சொன்னது என்பதை அடுத்த நிமிடம் ஞாபகம் வைத்துக்கொள்ள ஆவனால் முடியாது. மறந்துவிடுவான்.



## கு றி ப் பு

“ONCE THERE WAS and twice there wasn't” – இது துருக்கிய மொழியின், கதை சொல்லும் கலையில், ஒரு கதையை துவங்கும் உத்திகளில் ஒன்று.



“**ஹா சா ன் !**”, என்று அழைத்தார் அவனுடைய எசமான். “இந்தா, காசு. இதை எடுத்துக்கிட்டு போயி உப்பு கொஞ்சம் வாங்கிட்டு வா.” **ஹா சா ன்** அந்த காசை வாங்கி தொளதொளவென்றிருக்கும் கால்சட்டையின் பையில் வைத்துக்கொண்டான். “உப்பு,” அவன் யோசித்தான். “நான் உப்பு என்பதை எப்படி ஞாபம் வைத்துக்கொள்வேன்?”

இந்த முறை அவன் அவனிடத்தில் சொல்லப்பட்டதை ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டும் என்று உறுதியாக இருந்தான். “எனக்குத் தெரியும்,” நான் அதை அங்காடி வரை மீண்டும் மீண்டும் சொல்லியபடியே செல்வேன் என்று முடிவு செய்தான். இப்படியாக, நான் என்ன சொல்ல வேண்டுமென்பதை நிச்சயமாக நினைவில் வைத்துக்கொள்வேன்.

**ஹா சா** னின்  கிராமத்தில், **ஹீ ச்**  எனும் பொது சொல் உப்பைக் குறித்தது. அதனால் **ஹா சா ன்** "**ஹீ ச் ,  ஹீ ச் ,  ஹீ ச் ,**" என்று தனக்குத்தானே சொல்லியவாறு தட்டையான காலணியை சரக், சரக் என்று புழுதியான சாலையில் தேய்த்துக்கொண்டு அங்காடி நோக்கி நடக்கலானான்.

"**ஹீ ச் ,  ஹீ ச் ,  ஹீ ச் ,**" சொல்லியவாறு, ஒரு பாலத்தினாடியில், சிறிய ஓடையில் ஒரு உள்ளூர்வாசி மீன் பிடித்துக் கொண்டிருப்பதைப் பார்ப்பதற்கு நின்றான்.

**ஹா சா ன்** , தான் என்ன சொல்லவேண்டும் என்று சொல்லப்பட்டதை மறக்கக்கூடாது என்பதில் உறுதியாக இருந்தான், ஆனால் அவன் மக்கள் மீன் பிடிப்பதை பார்க்க விரும்பினான். அதனால், அவன் "***ஹீ ச் , ஹீ ச் ,  ஹீ ச் ,*** " என்று சொல்லியபடி நின்று பார்த்துக்கொண்டிருந்தான்.

தற்போது, துருக்கியின் மற்ற பெரும்பாலான பகுதியில், ***ஹீ ச்***  என்ற வார்த்தை "***ஒன்றுமில்லை***" என்று பொருளில் பயன்பட்டது. **ஹா சா ன்**  அங்கு நின்று, "***ஹீ ச்***" என்று சொல்லியபடி பாத்துக்கொண்டிருந்த போது மிகச்சரியாக, அந்த மீனவருக்கு கிடைத்ததும் ***ஒன்றுமில்லை***.





கடைசியாக அந்த மீனவர் மிகவும் கோபமடைந்து, “நீ அப்படி சொல்லாதே!” என்று கத்தினார். **ஹா சா ன்** மிகவும் ஆச்சர்யமடைந்தான்.

“அப்படியானால், நான் என்ன சொல்லவேண்டும்?” என்று கேட்டான்.

அதற்கு பதிலளித்த மீனவர், “அதிலாகட்டும் ஒரு ஐந்தோ, பத்தோ! அதிலாகட்டும் ஒரு ஐந்தோ, பத்தோ!” என்று சொல்லவேண்டும் என்றார். அதைத்தான் நீ சொல்ல வேண்டும் என்றார்.





**ஹா சா ன்** இப்போது சொன்னதை நினைவில் வைத்துக்கொள்ள மிகஆர்வமாக இருந்தான் எனவே உடன் “அதிலாகட்டும் ஒரு ஐந்தோ, பத்தோ! அதிலாகட்டும் ஒரு ஐந்தோ, பத்தோ!” என்று மீண்டும் மீண்டும் சொல்லிக்கொண்டான். இனி மறக்காது என்று நம்பிக்கை வந்தவுடன் அவன் தட்டையான காலணியை சரக்,சரக் என்று புழுதியான சாலையில் தேய்த்துக்கொண்டு அங்காடி நோக்கி நடக்கலானான்.

போகும்போது “அதிலாகட்டும் ஒரு ஐந்தோ, பத்தோ!” என்று முணுமுணுத்தபடி இருந்தான்.

**ஹா சா ன்** குழப்பமடைந்தான். “அப்படியானால், நான் என்ன தான் சொல்ல வேண்டும்?” என்று கேட்டான். நீ, “கடவுள் அவன் ஆன்மாவை ஆசிர்வதிப்பாராக! கடவுள் அவன் ஆன்மாவை ஆசிர்வதிப்பாராக!” என்று சொல்ல வேண்டும். இதுதான் நீ சொல்லவேண்டியது, என்றார் அந்த மனிதர்.





சாலையில் ஒரு சவ ஊர்வலத்தை எதிர்கொண்டான். அந்த ஊர்வலம் செல்வதை பார்த்தபடியே “அதிலாகட்டும் ஒரு ஐந்தோ, பத்தோ! அதிலாகட்டும் ஒரு ஐந்தோ, பத்தோ!” என்று முழக்கமிட்டபடி இருந்தான். அங்கு அந்த கூட்டத்தில் ஒருவர் இதை கேட்டு மிகவும் கோபமடைந்தார். “சிறுவா, நீ இப்படி சொல்லக்கூடாது!” என்றார்.

**ஹா சா ன் ,** அவரைபின் தொடர்ந்து “கடவுள் அவன் ஆன்மாவை ஆசிர்வதிப்பாராக! கடவுள் அவன் ஆன்மாவை ஆசிர்வதிப்பாராக!” என்று மீண்டும் மீண்டும் சொல்லியவாறு இருந்தான். இனி நினைவில் வைத்துக்கொள்ள முடியும் என்று நம்பிக்கை வந்தவுடன் அங்காடி நோக்கி நடக்கலானான்.

அவன் “கடவுள் அவன் ஆன்மாவை ஆசிர்வதிப்பாராக!” என்று முணுமுணுத்தவாறு செல்லும்போது அவன் ஏதோ வித்தியாசமான நாற்றத்தை உணர்ந்தான். அவன் தனது நாசியின் உணர்வைப் பின் தொடர்ந்து, சாலையோரம் இறந்து கிடக்கும் ஒரு மீனிடம் வந்தடைந்தான். அந்த இறந்துபோன மீனை குனிந்து பார்த்துக்கொண்டே “கடவுள் அவன் ஆன்மாவை ஆசிர்வதிப்பாராக! கடவுள் அவன் ஆன்மாவை ஆசிர்வதிப்பாராக!” என்று முணுமுணுத்துக்கொண்டிருந்தான்.





அப்போது அங்கு வந்து சேர்ந்த ஒரு மனிதர், **ஹா சா ன்** பேசிக்கொண்டிருப்பதை கவனித்தார். பக்கத்தில் வந்து கீழே பார்த்தபோது அவர் இறந்து கிடக்கும் மீனைத்தவிர வேறெதையும் பார்க்கவில்லை. “சிறுவனே, உனக்கென்ன பைத்தியமா?” என்று ஆச்சர்யப்பட்டார். “நீ அப்படி சொல்லக்கூடாது!” என்றார்.

**ஹா சா ன்** மேலும் குழப்பமடைந்தான்.

“அப்படியானால், நான் என்ன சொல்ல வேண்டும்?” என்று கேட்டான். அந்த மனிதர் “உவே! என்ன நாற்றம்! உவே! என்ன ஒரு மோசமான நாற்றம்! என்று தான் நீ சொல்லவேண்டும்,” என்றார் அவர்.

**ஹா சா ன்** னின் மூக்கு அது முற்றிலும் உண்மைதான் என்று சொல்லிற்று. அவன் சொல்லவேண்டியதை நினைவில் கொள்ள, அவன் மீண்டும் மீண்டும் “உவே! என்ன நாற்றம் உவே! என்ன ஒரு மோசமான நாற்றம்!” சொல்லியபடி சென்றான். அவன் எதை சொல்லவேண்டும் என்று சொன்னரோ அதை மறக்காமல் இருக்க திரும்பத்திரும்பச் சொல்லியபடி சென்றான்.



**ஹா சா ன்** நடந்து போகும்போது மூன்று பெண்கள் துருக்கிய குளியல் கூடத்திலிருந்து வெளியே வந்தனர். அந்த மூவரும் தூய்மைகவும் பொலிவுடனும் காணப்பட்டனர். அவர்கள் **ஹா சா ன்** “உவே! என்ன நாற்றம் உவே! என்ன ஒரு மோசமான நாற்றம்!” என்று சொல்வதை கேட்டனர்.





அந்த பெண்கள் குளியல் பூவாளிகளை கீழே போட்டுவிடு, நீ எப்படி அவ்வாறு சொல்லலாம்? உனக்கு எவ்வளவு தைரியம்? என்று கூச்சலிட்டபடி கற்களை எடுத்து வீசத்தொடங்கினார்கள்.

பாவம் **ஹா சா ன்** உண்மையிலேயே குழம்பிபோய்விட்டான். “அப்படியானால், நான் என்ன சொல்ல வேண்டும்?” என்று அந்த பெண்களையே கேட்டான். அவர்களில் ஒரு பெண் “ஓஹ் எவ்வளவு அருமை! ஓஹ் எவ்வளவு அருமை!” என்று தான் நீ சொல்ல வேண்டும் என்றாள்.



“ஆமாம்”, மற்ற பெண்களும் ஆமோதித்தார்கள். “ஓஹ் எவ்வளவு அருமை! ஓஹ் எவ்வளவு அருமை!” என்று தான் நீ சொல்ல வேண்டும், என்றனர். அந்த மூன்று பெண்களும், அவன் தட்டையான காலணியை சரக், சரக் என்று புழுதியான சாலையில் தேய்த்துக்கொண்டு, அவர்கள் சொன்னதை மீண்டும் மீண்டும் சொல்லியபடி அங்காடி நோக்கி நடந்து செல்வதைப் பார்த்து குலுங்கிக்குலுங்கி சிரித்தனர்.



இன்னமும் “ஓஹ் எவ்வளவு அருமை! ஓஹ் எவ்வளவு அருமை!” எனறு சொல்லியபடி சென்றான். அப்படியே இருவர் சண்டையிடும் இடத்தை வந்து சேர்ந்தான். சிறிது நேரம் அங்கே நின்று அந்த சண்டையைப் பார்த்தபடி இருந்தான். முதலாமான் இரண்டாமாவனை ஒரு குத்து விடும்போது “ஓஹ் எவ்வளவு அருமை!” என்றான், மறுபடி இரண்டாமாவன் முதலாமவனை ஒரு குத்துவிடும்போது “ஓஹ் எவ்வளவு அருமை!” என்றான்.



இப்போது, இவன் சொன்னதைக்கேட்ட இருவரும் கோபமடைந்து, தங்களுக்குள் சண்டையிடுவதை நிறுத்திவிட்டு. இருவரும் **ஹா சா னு** க்கு ஆளுக்கொரு குத்துவிட்டார்கள். “நீ அப்படி சொல்லக்கூடாது!” என்றான் முதலாமாவன். அவன் அந்த சிறுவனுக்கு கூடவே மேலும் ஒரு குத்து விட்டான்.





குழப்பமடைந்த **ஹா சா ன்** “அப்பபடியானால், நான் என்ன சொல்ல வேண்டும்?” என்று கேட்டான். அதற்கு இரண்டாமாவன் பதில் சொன்னான். “திருவாளர்களே! இப்படி செய்யாதீர்கள், தயவுசெய்து சண்டையிடாதீர்கள்!” என்று நீ சொல்ல வேண்டும் என்றான். முதலாமவனும், ஆமாம் நீ அப்படித்தான் சொல்லவேண்டும் என்றான்.

“திருவாளர்களே! இப்படி செய்யாதீர்கள், தயவுசெய்து சண்டையிடாதீர்கள்!” என்று மீண்டும் மீண்டும் சொல்லியவாறு, இனி, அவன் என்ன சொல்லவேண்டுமோ அதை நினைவில் வைத்துக்கொள்ள முடியும் என்று நம்பிக்கை வந்தவுடன் சாலையில் இறங்கி நடக்கலானான்.



அங்காடியிலிருந்து சிறிது தூரத்திலிருக்கும்போது தெருவில், இரண்டு நாய்கள் சண்டையிடுவதை அவன் கண்டான். எப்போதுமே சண்டையை பார்க்கும் மிகுந்த ஆர்வத்தில் “திருவாளர்களே! இப்படி செய்யாதீர்கள், தயவு செய்து சண்டையிடாதீர்கள்!” என்று சொல்லியவாறு இருந்தான்.



அவனருகே நின்றிருந்த ஒரு மனிதர் “நீ என்ன முட்டாளா?” என்று கேட்டார். “நீ அப்படி சொல்லக்கூடாது!” என்றார். **ஹா சா ன்** கண்கள் விரிய ஆச்சர்யத்துடன் அவரைப் பார்த்து “அப்படியானால், நான் என்ன தான் சொல்ல வேண்டும்?” என்று கேட்டான்.





“நல்லது”, “வெளியே போ, நாயே! தள்ளிப்போ, நாயே!“ என்று மட்டும் நீ சொன்னால் போதும், என்றார் அவர். அது தான் நீ சொல்ல வேண்டியது. **ஹா சா ன்** அவனுடைய வழியில் தொடர்ந்தான். “வெளியே போ, நாயே! தள்ளிப்போ, நாயே!“ என்று திரும்பத்திரும்ப சொல்லியபடி அவன் அங்காடியில் நுழைந்தான்.

அங்காடியின் முதல் கடையில், ஒரு செருப்பு தைப்பவர் ஒரு காலனியை செய்து கொண்டிருந்தார். அவர் ஒரு துண்டுத் தோலை வாயில் வைத்து இழுத்துக்கொண்டு இருந்தார். அப்போது அவர், **ஹா சா ன் ,** "வெளியே போ, நாயே! தள்ளிப்போ, நாயே!" என்று சொல்லிக்கொண்டு போவதை கேட்டுவிப்பட்டார். செருப்பு தைப்பவர் கோபமாக வாயிலிருந்த தோல் துண்டை துப்பிவிட்டு, "நீ தான் நாய்!" என்று கத்தினார். "நீ அப்படி சொல்லக்கூடாது!" என்றார்.

இப்போது **ஹா சா ன்** முழுவதும் குழப்பமடைந்தான். "தயவு செய்து என்மீது கோபப்படாதீர்கள், நான் என்ன சொல்ல வேண்டும்?" என்று சொல்லுங்கள்," என்றான். அதற்கு அந்த செருப்பு தைப்பவர் "சிறுவனே, நீ ஒன்றும் சொல்ல வேண்டாம்! **ஹீ ச்** என்று மட்டும் சொல்!" என்றார்.





“ஆஹா, மிக்க நன்றி!” “இது தான் நான் ஞாபகம் வைக்க வேண்டியது!” என்று மகிழ்ச்சியாக கூச்சலிட்டபடி இன்னும் சில கடைகள் தள்ளிப்போய், உப்பை வாங்கிச் சென்றான்.



நி றை வு